உ

சிவமயம்.

சேவகராஜப்பெருமாள் துணை.

துலக்குடி நகர்

# சிங்கார மாலை.

இஃது

பள்ளத்தூர்-நாராயணபுரம்

அருட்கவி பாலஜோஸியம்

## பழ. அரு. பழனியப்ப செட்டியார்

இயற்றியது.

மதுரை,

ஹரிஸமய திவாகரம் பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

தாது ஹ தை மீ

1937.

உ

சிவமயம்.

சேவகராஜப்பெருமாள் துணை.

# துலக்குடி நகர்

# சிங்காரமாலை.

இஃது

பள்ளத்தூர்-நாராயணபுரம்

அருட்கவி பாலஜோஸியம்

## பழ. அரு. பழனியப்ப செட்டியார்

இயற்றியது.



மதுரை,
ஹரிஸமய திவாஹரம் பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.
தாதுஹூ தைமீ
1937.

உ

சிவமயம்.

சேவகராஜப்பெருமாள் துணை.

# முகவுரை.

## நகர் விபரம்.

துலக்குடி நகரென்பது பாண்டிவளநாட்டிற்கு மேற்கே சிவகெங்கையும், வடக்கே திருக்கோஷ்டியூரும், கிழக்கே மயூர கிரியும், தெற்கே காளையார்கோவிலும் எல்லைகளாகப் பெற்று இவற்றினிடையே பாடலுடைய ஸ்தலத்தில் பெருமைபொருந்திய திருப்புற்றூர் என்ற நகரிலிருந்து திருமகள் நடனம்பெற்ற கண்டரமாணிக்க நகரையடுத்து திருவிளையாடலிற் சிறப்புற்றுவிளங்கும் பட்டமங்கல நகர் மார்க்கமாயேழாவது மைலில் தவத்திற் சிறந்த தனவைசிய குலத்தாராகிய சீமான்கள் வசிக்கின்ற சொக்கநாதபுர மென்ற நகருக்கு மேற்புரம் கூப்பிடு தூரத்தில் குறைவி லாது மழைவருஷித்து செந்நெல் முப்போகம் செழிப்புற் றோங்கும் (கண்மாய்) ஏரியும் நீர்வளமும் மகிமைபொருந் திய தீர்த்தக்குளமும் தண்ணீர்ப் பந்தலும் நந்தவனமும் விடுதிகளும் தென்னையும் பலசோலைகளும் குளிர்ந்த காற் றும் நறுமணமும் பொருந்தியவிடத்தில் பெரிய திருப்பணி மண்டபம் திருமதில் ராசகோபுரம் அமைந்த திருக்கோவி லில் சேவகப்பெருமாளய்யனார் வசித்துவருகின்றார். அத் திருக்கோவில் ஆலயத்திற்கு சிலர் கத்தப்பட்டு அய்யனார் கோவிலென்றும் துலக்குடியென்றும் தொட்டியத்தான் கோவிலென்றும் சொல்லி வழங்கிவருகின்றது.

## திருக்கோவில் அமைந்த விபரம்.

தலக்குடிநகரில் இத்திருக்கோவில் வெகுகாலத்திற்கு முன் ஆலயமாகவிருந்தது. 1685ஞ கருங்குளம் கத்தப்பட்டு கௌரிபட்டணம் நகரத்தாரும் ஆக மூவர்களும் தொண்டுபுரிந்து கொண்டாடிவந்த அய்யனர் சிலையை ஸ்தாபித்து வைத்தார்கள். அதன்பின் பக்கத்திலிருந்த இருண்டு அடர்ந்து வளர்ந்துவந்த வனத்திற்கு கோக்களை ஓட்டிக்கொண்டுபோய் மேய்த்துவந்த இடையன் தினம் பால் பீச்சிக்கொண்டு அய்யனர் சன்னதி முன்பாக வரும் போதெல்லாம் காலிடறி, தடுமாறி, பால் தரையின்மீது கொட்டிக்கவிழ்ந்துவிடுவது வழக்கம். ஓர்நாள் அடங்காத கோபங்கொண்டு மண்வெட்டியினல் பூமியை சிதற வெட்டியதில் பூமிக்குள் தானய் முளைத்தவதரித்த சிவலிங்கப் பெருமானின் சிரசில் வெட்டுப்பட, ரத்தம் குபீரென்று மேற்கிளம்பி அருவியாய் ஓடிற்று. வெட்டினவனுக்கு கண் தெரியாமல் பிரமஹத்திதோஷம் பிடித்துவிட்டது. அதை யறிந்த அவன் குலத்தாரெல்லோரும் சன்னதியில் வந்து முறையிட, சிலநாள் சென்று சுவாமியும் கருணைகூர்ந்து தென்புறம் தீர்த்தக்குளம் ஒன்று ஏற்படுத்தி அதில் ஸ்நானம் செய்தால் எவ்வகை தோஷ குற்றங்களும் நிவர்த்தியாகி கண் இரண்டும் வெளிச்சமாகுமென்றும் உத்தரவு செய்தார். அதுபோல் குளம் உண்டுபண்ணி ஸ்நானம் செய்தவுடனே குற்றங்கள் நீங்கி கண் வெளிச்சமாயிற்று அப்பால் சிலகாலம் அய்யனருக்கு முன்னதாய் அமைந்த சிவலிங்கப்பெருமானுக்கு அவனே தொண்டுசெய்து பரலோகம் சென்றான். மேற்படி தோஷத்தை விலக்கி கண் வெளிச்சத்தைக் கொடுத்த புண்ணிய நதிதான் இப்போது கோவிலுக்குத் தென்புரம் இலுப்பை மரத்துக்கு மேல்

புரம் இருந்துவருகிற தீர்த்தக்குளம். அதன் மகிமையை யாவருமறியலாம்.

## அழகு கருப்பண சுவாமி விபரம்.

தென்கைலையாகிய மதுரைமா நகரின்கண் எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கக் கடவுளின் சொந்த மைத்துனராகியும் திருமாலிருஞ்சோலையில் 18 சிம்மாசனத்தின் மேலிருந்து அரசு செலுத்தும் மகாவிஷ்ணுவாகிய பதினெட்டாம்படிக் கருப்பரை அடியார்கள் திருத்தொண்டு புரிந்து பக்திவிஸ்வாசமாய் ஏகமனதாயழைக்க அதற்கிணங்கி எழுந்தருளி சகல வைபவமும் பொருந்திய துலக்குடி நகர்த் திருக்கோவிலில் வந்தமர்ந்து அடியார்கள், பக்தர்கள், இல்லறவாசிகளையும் காப்பாற்றி வரமுமீந்து பெரியோர்களுக்கு முத்தியும் கொடுத்து சூரியனைப்போல் பிரகாசித்து வருகிறார். அப்பெருமானை ஆனந்தமாய் கண்குளிரப் பார்க்க வேண்டுமென்று நினைக்கும் அன்பர்கள் எல்லோருக்கும் அடியார்களாகிய திருத்தொண்டர்கள் பேரில் சன்னதம் வரும்போதெல்லாம் ஆகாயத்திலிருந்து உலகம் பரிமளிக்கக்கமழும் கதம்ப வாசனையை வீசிக்கொண்டு அக்னி சொரூபமாய் வரும் உயர்ந்த மட்டிப்பால் சாம்பிராணியை வாங்கிக்கொடுப்பார். இன்னும் அவர் மகிமை அதிகம்.

## தொட்டியக்கருப்பர் விபரம்

தேசங்கள்மெய்க்கும் மலையாளம் 9 கம்பளமும் அஷ்டதிக்குகளும் சகலபுவன அண்டங்களும் நிறைந்த பரிவார சேனைகளோடு கெம்பீரமாயரசுபுரிந்துவருகிறவரும் தேவர்களுக்குச் சகாயம்செய்து தைரியத்தை நிலைநாட்டியவரும் இந்திராணி கற்பைப் பாதுகாத்தவரும் குசன் என்ற வீர தைரிய பராக்கிரம புருஷனை சம்ஹாரம் செய்ய நூதன ரூபமாயிருக்கும்படி கருப்பர் அம்ஸமாக அவதரித்தவருமாகிய தொட்டியக்கருப்பண சுவாமியை துலக்குடி நகரில் வந்தமரும்படி செய்யவேணுமென்று வெகுகாலம் தவமிருந்த அடியார்கள் நோக்கத்தை தசாவதாராகிய திருநாமதாரியும் கவனித்து வரமும் கொடுத்து தொட்டியச்

கருப்பரையும் வந்தமரும்படியும் தமக்குத் துணையாகவும் அருள்புரிந்தார். அப்படியே பக்தர்கள் மனங்களிக்க துலக்குடி துலங்க வந்தமர்ந்து ஏகசக்ராதிபதியாய் அரசுபுரிந்து வரும் மகிமையை ஆதிசேடனும் சொல்ல நாணுவானென்றால் அன்பிற் சிறந்த தொண்டர்கள் சுவாமியை நேரிலும் பார்க்கலாம் அவர் பேரில் பாடப்பெற்ற சிங்காரக் கவிகளிலும் அறியலாம்.

## பாடல் விபரம்

மேற்படி துலக்குடி நகரென்ற மகிமை பொருந்திய ஸ்தலத்தில் மேற்கண்ட கோவிலில் அமைந்துள்ள சிவலிங்கம், விநாயகர், முருகக்கடவுள், வீரபத்திரர், வைரவர், சேவகராஜ அய்யனர், பதினெட்டாம்படிக்கருப்பர், தொட்டியக்கருப்பர், பத்திரகாளியம்மன் இன்னும் பரிவார தேவதைகளின்மீது கட்டளைக்கலித்துரை, வெண்பா, ஆசிரிய விருத்தம், சன்னத விருத்தம், அலங்காரச்சிந்து, நொண்டிச்சிநது, ஆனந்தக்களிப்பு, கும்மி, கீர்த்தனை வகையராக்களும் பாடப்பெற்றுள்ளது.

அடியேனல் இயற்றிய இப்பாடல்களில் பிழைகளிருந்தால் பெரியோர்கள் பொருத்து ரக்ஷிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து கேட்டுக்கொள்ளுகிறேன்.

### நல்வழி வேண்பா.

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்.

### ஆக்கியோர்.

இந்துஸ்தானி பாஷையையும், முதன்மையான ஜோதிடத்தையும் நன்கு கற்றறிந்துணர்ந்த அருட்கவி பள்ளத்தூர் நாராயணபுரம் பழ. அரு. பழனியப்பச்செட்டியாரை பலர் அன்பாய் முயற்சியுடன் வேண்டி கேட்டுக்கொண்டமையால் இப்பாடல்களை இயற்றி அமைத்துள்ளனர்.



பழ. அரு. பழனியப்ப செட்டியார்,

பால ஜோதிடம்,

நாராயணபுரம், பள்ளத்தூர்.

உ

சிவமயம்.

திருமகள் கடாக்ஷம் பெற்ற

கிழச்செவல்பட்டி

# முத்தப்ப செட்டியார் பாடல்.

---

கோலமும்மத தாரை குலவுகணபதிநமோ
குஞ்சரத் திருமுகவனே
கோதண்டபாணி திருமால்மருகனே யொற்றைக்
கொம்பனே யெனதன்பனே
வேலவன் றுணைவவுனை வேண்டுவன் றுணைவந்த
விக்னேஸ்வரக்கடவுளே
மேதினியிலடியனே னுரைக்கின்ற விண்ணப்பம்
மேலொன்று வந்துகேண்மோ
ஞானமது விளைபாலை யந்நாடுநகரமும்
நாடோறுமிகவாழவும்
நல்வருஷமென்றெண்ணி மழைவருஷமருள்செய்த
நாளுமழை ஐந்துகரனே
வாலசந்திர நுதன்கொள்ள வனிதசிவகாமியருள்
மைந்தபள்ளத் தூர்நகர்
மனமகிழ்ந்திடக்கண்ட இனைமகன்குடிகொண்ட
மனமகிழ்ந் தருள்கண்டனே.

## பாண்டியதேசச் சிறப்பு.

கைத்தல நான்கிரண் டுடையமலர்க் கடவுள்
மேலொருநாட் கயிலையாதி
எத்தலமு மொருதுலை யிட்டித்தலமு
மொருதுலையிட் டிரண்டுந் தூக்க
உத்தமமாந் திருவாலவாய் மிகவுங்
கனத்ததுகண் டுலகின்மேலாய்
வைத்த தலமிதுவென்று விதன்பெருமை
யாவரே வழுத்தற் பாலார்.

## மதுரைமாநகரின் பெருமை.

அத்திருமா நகரின்பேர் சிவநகரங்
கடம்பவன மமர்ந்தசீவன்
முத்திபுரங் கன்னிபுரந் திருவால
வாய்மதுரை முடியாஞானம்
புத்திதரும் பூவுலகிற் சிவலோக
சமட்டி விச்சாபுரந் தென்கூடல்
பத்திதரு துவாதசாந்தத் தலமிதுவென்
றேதுவினுற் பகர்வர் நல்லோர்

## அம்மையார் திருஅவதாரம்.

குறுந்தளிர் மெல்லடிக்கிடந்த சிருமணிநூ
புறஞ்சதங்கை குழறியேங்க
நறுந்தளிர் போலசைந்து தளர்நடையொதுங்கி
மழலையிளநகையுந் தோன்றப்
பிறந்தபெரும் பயன்பெறு பொன்மாலைமடி
யிருந்தொருபெண் பிள்ளையானுள்
அறந்தழுவு நெறிநின்றோர்க் கிகம்போகம்
வீடளிக்கு மம்மையம்மா.

# சாற்றுக்கவிகள்.

---

கீழச்செவல்பட்டி மகா-ா-ா-ஸ்ரீ அக்ஷராவதானம்
பண்டித. பீம. சுப்பராய சர்மா அவர்களால்
இயற்றப்பெற்றது.

**வெண்பா.**

வையகத்தோர் போற்ற வயங்குபதி கம்புகழ்சேர்
அய்யனெனப் பேர்படைத்தோர்க் காக்கினன்—துய்ய
வளனுயர்த்த கோமான் வயங்குபள்ளத் தூரார்
பழனியப்ப னென்றிடு நண்பன்.

---

தமிழ்ப்பண்டிதரும், ஜோதிடசாஸ்திரியுமான
சா. சோமசுந்தர ஆச்சாரி இயற்றியது.

திருவளருந் தலக்குடிவா ழண்ணல் தொட்டியக்கருப்பத்
தேவின் மீதி
லருள்வளருஞ் சிங்காரத் தோத்திரப்பா மாலையிகத்
தரைந் தான்மிக்கப்
பொருள்வளருந் தனவணிக குலத்துதித்த பழனியப்பப்
புனித னன்பா
லிருள்விலகும் பருதியென னிலவுலகி லெவர்களுக்கு
மெழிலாய்த் தானே,

---

உ

சிவமயம்.

சேவகப்பெருமாள் துணை.

# துலக்குடி ஐயனார்
# சிங்காரமாலை.

---

## காப்பு.

### வேண்பா.

சீரார் துலக்குடிவாழ் செய்ய கருப்பணன்மேற்
பேரா ரலங்காரம் பேசுதற்கு--நேரார்
மணமாலை சூட்டிவளர் வல்லபைச மேதன்
கணநாதன் றுய்யபதங் காப்பு.

### கட்டளைக்கலித்துறை.

### சிவபெருமான்

தேனுரும் பொய்கைவளங்கொள் துலக்குடிசீர் நகரில்
வானுருந்தேவரு மற்றுமுள்ளோர்களும் வந்துதொழுந்
தானுய்முளைத்த சிவலிங்கம் பொன்மலர்த்தாள் பணிவோர்
கானுருங் கன்மவினை நீங்கியென்றுங் களித்துய்வரே.

### முருகக்கடவுள்

திகழ்மாமுடியு மறுமுகப்பொட்டுந் திருக்குழையும்
பகர்மணிமார்பும் பனிரெண்டுகையுஞ் செம்பட்டுடையுந்
தகுங்கனிவாயு மருள்விழியுன்றுள் சதங்கைகொஞ்சு
புகலுந்துலக்குடிவாழ் முருகய்யனைப் போற்றுவமே.

## வீரபத்திரர்

ஆரணிசெஞ் சடைவேணியன் கோபத்தனலிலெழு
வாரியவேர் வையிலகோர வடிவமாய்வந்துதித்து
சூரனுந்தக்கனின் வேள்வியைப்போக்கித் துலக்குடிவாழ்
வீரபத்திரன் பதம்போற்றியான் செல்வமிகுந்துய்வனே.

## வயிரவர்

ஆலத்தையுண்ட வரன்பதிமந் திரியாகிமிகக்
கோலமாய் கிண்கிணிமாலையும் பாதக்குரடிலங்க
சூலகபாலமு மேந்தித்துலக்குடி தோன்றிவளர்
காலவயிரவன் பொற்பதம்போற்றிக் களித்துய்வனே.

## பத்திரகாளி

சீரார்முடியும் வயிரக்குழையுஞ் சிவந்தபட்டும்
வாரணிகொங்கையுஞ் செங்கைவளையு மணித்தண்டையும்
ஏரணிபொட்டுங் கனிவாயிதழு மிருவிழியும்
பாருந்துலக் குடிப்பத்திர காளிபதந்துணையே.

## அய்யனார்

அண்டாண்ட புவியேழும் நிறைந்தய்யன்
ஆதியரி யரனுய்வந்த வதரித்தய்யன்
கண்டபொருட் காதார மானவய்யன்
காசினியோ ரைக்காத்தூரட் சிக்குமய்யன்
எண்டிசையும் பரவிவள ரினியவய்யன்
யெத்தொழிற்கு முதற்பொருளா யிருக்குமய்யன்
தொண்டர்கள் முன்வந்து தோன்றிடுமய்யன்
துலக்குடிசே வகப்பெரு மாள்துணையே.

## ஆசிரிய விருத்தம்.

செங்கமல மாதினொடு வெண்கமல மாதுஞ்
சிறந்துவாழ் கின்றநகரம்
செந்நெல் முப்போகம் விளைந்திடத் தக்கதாய்த்
தங்குசூற் கொண்டமேகம்
பங்கமற மூன்றுமழை பாரிற்பொழிந்துமன் னவர்நீதி
யோங்கு நகரம்
பக்தியுட னுலயப் பூஜைதவ ராவணம்
பகரும் வேதியர்களாற்றத்
துங்கமுறு வேதங்க ளோதுபவர் கற்பார்ந்த
தூயமங்கை யர்களோடும்
துலங்கிட வரங்கள் நாலெட்டுந் தொடர்ந்துவளர்
சொக்கலிங்க நாட்டினிற்
மங்கலறு நற்றுலக் குடியில்வாழ் சேவகப்
பெருமாளின் தளகர்த்தனும்
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப்பண சாமியே. (1)

திருமருவு புண்ணியத் தீர்த்தங்க ளும்வாச
மிலகுபல பூஞ்சோலையும்
சித்திர மிலங்குபல மண்டபக் கால்களுஞ்
சேர்திருப் பணியினழகும்
அருள்மருவு ராஜகோ புரமேவு சிகரமும்
ஆய்ந்தசித் திரவரிசையும்
ஆதிசிவ லிங்கமொடு பூரணை பொற்கலை
யமைந்துவள ரையனழகும்

உருவினுயர் வீரபத் திரனெடும் வையிரவன்
உயர்தொட் டியக்கருப்பன் .
ஓதரிய கரிபரிகள் பூதகண சேனைபல
வோங்கிடும் பந்தியுஞ்சீர்
மருவுந் தலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே (2)

அருட்பெருஞ் சோதிதரு மைங்கர னவர்க்கிளைய
அருமுகன் வீரபத்திரன்
அதியுக்கிர ப்பெரிய கருப்பண்ண னெடுவயி
ரவனடங்காதமுனியன்
கருத்திடுந் தொட்டியக் கருப்பனுட னேசிறிய
கருப்பனுஞ் சங்கிலியனுங்
கனமுறு நல்லரசுமகன் சன்னசி மூர்த்தியுங்
கங்காளிகாட்டேரியுந்
திருத்தரும் பேச்சிராக் காச்சிசிந் தம்மனுந்
திறமுறுஞ்சோணைக்கருப்பன்
திரளான கரிபரியும் பரிவார தேவதைகள்
திகழ்திருப் பந்தியுஞ்சீர்
மருவுந் தலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே (3)

திருமலிச டாமுடியில் மணிமகுட மதிநுதற்
றிலகநன் மகரகுழையும்
செழிகருணை பொழியுமிரு விழிகளுஞ் செம்பவள
விதழ்நகை புரிந்தவாயும்
அருமகர கண்டிகை பதக்கமது மார்பதனி
லணியுமா பரணமின்ன
ஆடையிற் றேர்ந்த செம்பட்டு ரத்தினக்கடக
மங்கையில் யோகதண்டும்
பொருண்மருவு சித்திர மிழைத்த மேற்சோமனும்
பொற்பாத தண்டைகொலுசும்
பொற்புயர்ந் திலகுமணி பீடத்திருந்து மேலரசு
புரிகம் பீரமும்
மருவுந் துலக்குடி வளர்கின்ற சேவகப்பெருமாளின்
வாசல் மேவும்
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே (4)

கதிரொளிசெய் மணிமகுட முடியும் வைடூரியத்
தாவிலகுசெவி யின்முருகும்
கருக்கொடுமு ருக்கிவிடு மீசையுக் கிரமுறக்
கனிவாயிலங்குமொழியும்
இதமார்பில் ரத்தினப் பதக்கமணி மாலையு
மெழினுதற் றிருநாமமும்
இசைந்தொழு கிடுங்கனக கடகமுங் கையினில்
லேந்துதடி யுஞ்சூலமும்

குதிகொள்நல் வல்லவட் டுடனிடைச் சல்லடக்
குஞ்சமுங் கருங்கச்சையுங்
கொண்டாடு மொலிவீர தண்டையுஞ் சீர்பாத
குறடுமுறநாற்பக்கமும்
மதில்சூழ் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே (5)

ஆதிமுத லோர்ரான் டாடிமதி பூரணையி
லன்பர்மிகு பக்தியுற்று
அழகர்மலை தனிலேகி மதிதபெரு மாடனக்
கர்ச்சனைகள் செய்துபின்னர்
சாதியமர் சந்தணத் தடமேவு தீர்த்தமுந்
தலைமீதுவைத்தவுடனே
தங்குபதி னெண்படிக் கருப்பணருள் மேவியே
சகலவிருதுகளினேடும்
பாதுகா வென்றுனைய டுத்துவந் தேவபய
பாதமல ரேற்றுமிக்க
பலமான பூசையபி ஷேகமுமி யற்றவே
பரிந்தருள் சுரப்பையேபூ
மாதுரை துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (6)

திகழ்மாசி மதிவரும மகோற்சவப் போதுபுகல்
சீர்விழாப் புரவிவரவே
திவ்யமுக் கனிபால்சக் கரைககன மீதுறுந்
தேனுமிள நீர்களோடும்
மிருவாச முறுபனீர் பால்பழம் முதலாகி
இலகுகாவடி கள்பலவும்
வெடிவாண வேட்டுமேற் குடையாதி தீவட்டி
மேளவாத் தியமுழங்க
புகழாடல் பாடலொடு சுற்றிவந் தேயுனது
பொன்னடிப ணிந்துபோற்றிப்
பூவுலகி லவரவர்கள் கேட்டவா மீவையிது
புதுமையைக் கண்டுவானோர்
மகிழுறு துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனென
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (7)

அண்டர்பணி தேவனே யன்பானு கூலனே
ஐயனே வந்தருளுமென்
றஞ்சலிபு ரிந்துமகிழ் தூபசாம் ராணியிட
ஆவேச மாயிரங்கி
தொண்டருக் கின்னருள்சு ரக்கஓ-ஆ வென்று
தோன்றியே சத்தமிட்டுத்
துய்யநற் சாம்பிராணி தங்கையினில் வாங்கிமிகு
சோதனைகள் காட்டியோங்குஞ்

சண்டப்ர சண்டமாய் வந்தால யந்தனிற்
றங்குமுனதன் பர்முன்செய்
சகலவினை தீர்த்துவர மருளுநின் மகிமையைச்
சாற்றவெளிதோ முகிலினம்
மண்டுந் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனுன
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (8)

திடமான வெடிவாண மொருபக்க மத்தாப்பு
தீவர்த்தி யொருபாரிசம்
சித்திரக் குடைகளொரு பாரிச மிலங்குபுகழ்
செப்புகவி யொருபாரிசம்
தடமேவு வெள்ளியாற் செய்ததடி செம்பொனிற்
செய்ததடி யொருபாரிசம்
சாம்பிராணி தூபங்க ளொருசார்பு விசிறிவெண்
சாமரைக ளொருபாரிசம்
பிடித்திலகு பேய்களை யோட்டுவர்கள் பாலரின்
பெயரிடுவ தொருபாரிசம்
பிரார்த்தனைசெலுத்துவர்க ளொருமருங்கிதையெனுற்
பேசவெளி தோவளத்தின்
வடிவுயர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனுன
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே, (9)

சகமீதி விரவினிற் செல்கின்ற மாதரைச்
சருவியே பயமுறுத்தித்
தலைசுற்றி யாடவே செய்கொடும் பேய்களை
சன்னதியில் ஓட்டுவித்துச்
சுகங்கொடுத் தெமதுகுடி காவென்று போற்றமெய்ச்
சுவாமிநின் மனமகிழ்ந்தோர்
துட்டப்பி சாசுகளை நினதுகைத் தடியினாற்
றுலைந்தேக வேயடித்துத்
திகையாம லாணியு மறைந்துசிந் தம்மனைத்
தினமடிய ரகமேகியே
தீதுவா ராதபடி காத்துரட் சித்திடச்
செய்வதைக் கண்டுபலரும்
மகிழுந் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (10)

சுந்திரமி குந்தசாத் தையன்மந் திரியுடன்
தோன்றுதள கர்த்தர்சூழத்
துலங்குகொலு தனிலிருந் துனதடியர் குடியினிற்
சோரபய மின்றியேகச்
சிந்தையினி லூக்கம்வை யென்கவே முன்னோடி
திருவடிபணிந் துபோற்றித்
தீரமுடனேகி யங்கடியவர் குடிக்கு ளொரு
தீங்குவா ராதியற்றிப்

பந்தியில் வந்துநீ ரிட்டவோ ரேவலின்
படிசெய்தோ மென்று தாழும்
பட்சமுறு நினதுபரி வாரங்கள் சூழவே
பாதுகாத் தினிதுநல்க
வந்தருள் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனுன
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (11

திலதமிடு மச்சாவ தாரநீ வலியநர
சிங்கமாய் வந்தவனுநீ
திடமான கூர்மாவ தாரநீ கோதண்ட
ஸ்ரீராம னனவனுநீ
பலமுறுங் கலிக்காவ தாரநீ துவாரகை
பௌத்தனு யானவனுநீ
பரசுரா மவதார மானவனு நீயுக்ர
பலராம னனவனுநீ
தலமீதில் வாமனவ தாரநீவ ராகவ
தாரனய் வந்தவனுநீ
தங்குமடி யேனிந்த வவதார மகிமையைச்
சாற்றவல் லவனுவனே
மலரடர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனுன
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (12)

ஆறுவள மலையாள மரசுசெய் பவனுநீ
அழகர்பதி வாழ்பவனுநீ
அதிமதுரை மீனாட்சி காவல்கொண் டவனுநீ
அமராபதித் தலைவநீ
சீருலவு மாம்பூண்டி செல்வத் தலத்ததிப
திருவேலநகற் றேவநீ
செழித்தோங்கு மாவடியில் கொலுவிருந் தவனுநீ
சிங்கப்பதி த்துரையுநீ
பேருலவு கன்னபுர மாரிதிரு வாசலிற்
பிரங்கரசு செய்பவனுநீ
பிரியமாய் பலநகரில் விளையாடு நின்பெருமை
பேசுதற்கெ ளியதாமோ
மாலுரை துலக்குடிப் பெருமாளின் வளமேவு
வாசல்தள கர்த்தனென
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (13)

திடமாய்நின் பொய்கையிற் சேர்ந்தினிது மூழ்கியே
செய்யதிரு நீறுபூசித்
தெரிசிப்ப வர்க்குமே கிரகதோஷ மில்லைமறு
தெய்வபீ டையுமில்லை
கடல்மீது பயமில்லை பேயில்லை நோயில்லை
கள்ளராற் சலனமில்லை
காடிபுலி மிருகங்கள் தொடர்பில்லை சர்ப்பங்கள்
கடிவிஷமு நேர்வதில்லை

இடரானசத் ருபயமில்லே மற்றெமவா தையென்ப
தென்னு ளுமில்லே
இன்னுமெத் துன்பமிலே நின்வலிமை கூறுதற்
கெளியதோ வெனதுநாவால்
வடிவுயர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (14)

சிந்தைதனி லுனதுதிரு நாமமற வாதுதொழு
வோர்க்குநற் கீர்த்தியுண்டு
திரமுண்டு ஜெயமுண்டு தீர்க்கமுள வயதுண்டு
திருமாது என்றுமுண்டு
சந்ததிகண் மிகவுண்டு தனமுண்டு கனமுண்டு
சகலபாக் கியமுமுண்டு
தருமான வித்தையும் புத்தியுந் துரைமன்னர்
தயையுள்ள பேட்டியுண்டு
எந்தவிட மேகினும் காரியம்வ சியமாம்
இடம்பொருளு மேவலுண்டு
இகபாச வுக்கியமு முண்டுனது பெருமைசொல்
வோர்புகழெ ன்னாளுமேவ
வங்தொளிர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (15

ஐயனே நினது திரு வாலயம டுத்தவென
தகக்குறையெ லாந்தீர்ந்திட
வடியன்முறை யிட்டதுன் செவியினிற் கேட்டதும்
அமுர்தவாய் பேசொணுதோ
கையால ணைக்கமன மில்லையோ வையநின்
கண்கருணை சற்றுமிலையோ
கனயோக மௌனமோ வர்மமோ தர்மமோ
கருவான வென்கருமமோ
செய்யாத குற்றங்கள் செய்தனோ நாயினேன்
செய்யினுங் காத்தருளவே
தேவரீ ருமதுகட னல்லவோ தயைசெய்து
திருவருள்புரிந் தருளுவாய்
மையறு துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (16)

கணநாதர் சிவலிங்கம் சேவகப் பெருமாளின்
கர்த்தாவு நாளும்வாழி
கனவீர பத்திரனு மடியர்பால் வைக்குநின்
கருணையெக் காலும்வாழி
பணமேவு தொட்டியக் கருப்பனொடு வயிரவன்
புகழ் பத்திரகாளிவாழி
பலமான பரிவார தேவதைகள் வாழியாம்
படியாளு மன்னர்வாழி
குணமுள்ள குடிபடைக ளனைவரும் வாழிநீ
குடிகொண்ட வணிகர்வாழி
கூறுகவி வாணரிது பாடினவர் கேட்டிதைக்
கொண்டவர்க ளென்றும்வாழி
மணமுயர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை
மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துரை
மால்கருப் பணசாமியே. (17)

# சன்னத அழைப்பு.

## முப்பத்திரண்டடிசீர் விருத்தம்.

அண்டபகி ரண்டனே தொண்டர்பா லண்டிவா
ஆவேச மாகவாவா
அகிலாண்ட கோடிசேர் பிர்மாண்ட நாயகா
ஆனந்த மாகவாவா
அரிநமோ நாராய ணளங்கள் முன்புவா
ஆதியஷ்டா க்ஷராவாவா
ஆதிமூலப் பொருளில் ஓலமிடு யானையை
அக்ஷணங் காத்தருளிய
ஆங்கார ரீங்கார வோங்கார னேவாஎன்
னப்பனே யிங்குவாவா
அதிதவா னந்தகோ விந்தவை குந்தவா
அகிலவுயிர் ரட்சகாவா
அந்தமிகு சுந்தரா னந்தகோ விந்தனே
அருளுளாய் இங்குவாவா
ஆதிவா சோதிவா அரிகரா னந்தனே
அய்யனே இங்குவாவா
சண்டப்பிர சண்டவுத் தண்டகோ தண்டனே
சத்ருசங் காரனேவா
தாரணியை யோரடிய ளந்தமால் தெவனே
சங்குசக் ரவினோதா

தருணமென் னையவா புவனரட் சகதீர
சமயமிது இங்குவாவா
தாருகா சூரசங் காரவா வீரவா
சாக்ஷாதி காரனேவா
தாசர்கள்ச காயவா நேயாவா தூயவா
தர்மபரி பாலகாவா
தண்டமிழ்க் குதவுமு தண்டனே சமயம்வா
தத்ரூப மாகவாவா
சர்வபரி பூரணவ கண்டதத் துவமான
தத்பரா விங்குவாவா
தாவிவரு சூரரின் றலையைத் துணித்துவரு
சர்வசங் காரனேவா
எண்டிசைகொள் தொண்டர்பணி கொண்டபொற்பாத
ஏழைபங் காளனேவா [வா
எட்டாத ரூபனே பட்டாபி ராமனே
யெந்தையே இங்குவாவா
இரணியாக் கனையொழித் திடாறுநர சிங்கவா
எண்ணுபுகழ் கொண்டவாவா
இந்திரன் றன்னுலகு காத்திடும் இறைவவா
இஷ்டகுல தெய்வமேவா
என்னையா விதுதருண மிங்குவா வென்முன்வா
எமதுகுடி காக்கவாவா
ஏதேது குற்றங்கள் செய்யினு மனங்கொண்டு
விரட்சிக்க வையவாவா

எனதுதாய் தந்தைகுரு தெய்வமே யென்முன்வா
எந்நாளும் காக்கவாவா

ஏகமாய் நின்றுயர் பாடியிற் குழலூது
இசைஞான கிருஷ்ணனேவா

மண்டலம கிழ்ந்துதுதி கொண்டாடு தேவனே
மாசக்ர வர்த்திவாவா

மாயாவ தாரனே காயாம்பு வண்ணனே
மாசிலாத் தேவனேவா

மண்டுபுவி கிடுகிடென மூதண்ட பாணிவா
மந்திரசொ ரூபனேவா

மருமல ருகந்தவா பரிமள சுகந்தவா
மரகதசொ ரூபனேவா

வண்டப்பி சாசுகளை வாட்டவா வோட்டவா
வல்வினைய கற்றநீவா

வருந்துமடி யார்கண்முன் கலகலென வோடிவா
மனமகிழ்ந் தருளநீவா

வளங்கிளர் துலக்குடிச் சேவகப் பெருமாளின்
வாசல்தள கர்த்தனை

மட்டிலா வுக்ரபதி னெட்டாம் படித்துறை
மால்கருப் பணசாமியே.

# தொட்டியக்கருப்பர் பேரில்

## ஆசிரிய விருத்தம்.

காருலவு கொண்டையிற் பொற்சரிகை மேற்சந்திர
காவியுருமாற் றெருங்கலுங்
காதிலொளி ரத்தினக் கடுக்கன்மேன் முருகுசெங்
கனிவாயிலங் குமொழியும்
தாருலவு மார்பினிற்ச ரப்பளிப தக்கமுந்
தகுநுதற் றிலகவழகும்
தங்கவளை செங்கைவீச் சரிவாளுஞ் சுக்குமாந்
தடியுடன் வல்லவேட்டும்
ஏருலவு சித்திரச் சல்லட மருங்கினி
லிருக்கியக ருங்கச்சையும்
எழின்மணிகள் கலகலென வொலிவீர தண்டையும்
இசைபாத குறடிலகவும்
ஊருலவு நற்றுலக் குடியோங்கு பெருமாளி
னேதரியதிரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டிய சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (1)

சீர்கொண்ட மால்பெறு கருப்பண ஸ்வாமியும்
சேர்சிறுக ருப்பண்ணனும்
செங்கையிற் சூலங்க பாலமும் ஏந்திவளர்
திரிசூலி மாகாளியுந்
தார்கொண்ட தனமாது பேச்சிராக் காச்சியும்
சங்கிலிக்கருப் பண்ணனும்
தவமிகுந் தாசுபுரி சன்னசி மூர்த்தியுஞ்
சௌந்திரச் சிந்தம்மனும்

பேர்கொண்ட முன்னோடி பரிவார தேவதைகள்
பெருக்கமொடு சூழ்ந்திருக்க
பெட்புயர்பீ டந்தனிற் கொலுவிருந் தரசு
பெற்றுவளர் துரைசிங்கமான்
ஞேர்கண்ட நற்றுலக் குடியோங்கு பெருமாளி
ஞேதரிய திரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்த திகழ் தொட்டிய சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (2)

கருதுதிகழ் மேடமதி புரவிக ளெடுப்பினிற்
கரிபரிகள் பந்திவரவும்
கடல்போல வாத்தியமு ழங்கவுயர் மாவிலைக்
கனதோர ணங்கதிக்கத்
திருவிருது குடையினெடு கவினுரவு மதிர்வேட்டு
ஜெகமெங்கு மொலிகுளிரவுந்
தீவர்த்தி மத்தாப்பி லங்கிடவு மானிடர்கள்
திருக்கூட்ட மாகவரவும்
அருளினெடு நின்சன்னிதி முன்னின்று பாடவும்
அன்புநீர் கண்சோரவும்
அதிசயம தோங்கிடும கோற்சவப் பெருமைதனை
யறியவச மாவதுளதோ
விருதுறு துலக்குடிச் சேவகப் பெருமாள்
விளங்குதிரு வாசலின்கண்
வேண்டுதள கர்த்தனே தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (3)

சதுர்காலி லேவீர தண்டைகள ணிந்துமணி
சந்துப்ப தக்கமிட்டு
தகுவாலில் முத்துச்ச ரக்கோவை யிட்டுநற்
தங்கங்கவடி மாட்டிமேலும்
கதித்திலகு முதுகினில் வைடூரி யப்பச்சை
கவினுசா லுவைவிரித்து
கனகச்சி காமணிக லிக்கத்து ராயுடன்
கண்டசர மணியணிந்து
அதியொளிரு முத்தார மேவுகடி வாளமோடு
அழகுபொன் சீனியிட்டு
அருமைபெ றுபுஷ்ப ராகப்பு ரவிமீதிலே
அடியாரின் குடிகாக்கவந்
துதவுந் துலக்குடிச் சேவகப் பெருமாளி
ஞேதரியதிரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (4)

தகதகென வொளிவீசு வயிரக்க டுக்கனுஞ்
சல்லடச் சர்வாங்கியும்
தண்டையொடு கடகமணி மாலையு மணிந்துநற்
சவ்வாதுப் பொட்டுமிட்டுத்
திகழ்பெரிய சுவாமிநீ பரிமீதி லேறவுஞ்
செஞ்சுருட்டிக் குடைகவித்
திடவிருது வாத்தியமு ழங்கவுந் தீவர்த்தி
செகஜோதி யாய்மின்னவு

மகிமைபெறு சின்னையா கட்டியங் கூறவும்
வலியுறுமுன் னேடிதொழவும்
வருமடியர் கலிதீர மிகுபவனி யாகவே
வந்துகுடி காக்கவுள்ளம்
உவக்குந் துலக்குடிச் சேவகப் பெருமாளி
னேதரியதிரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (5

அய்யனே யரசனே துய்யனே யித்ததியி
லடியனிடர் தீர்க்கவாவா
ஆதியே ஜோதியே யஞ்சலென் றேகாக்க
வன்புடனுகந் துவருவாய்
மெய்யனே வேந்தனே மேலான தெய்வமே
வேண்டினே னிங்குவாவா
விண்ணவர்கள் குறைநீக்குங் கருணையாங் கடவுளே
வேதாந்தமுத் திமுதலே
துய்யனே சுத்தனே !துரைராஜ கர்த்தனே
துஷ்டசம் மாரதேவா
சுரர்கள னுகூலனே சிலனே சமயமிகு
சுகிர்தனே நின்பதஞ்சார்ந்
துய்யுந் துலக்குடிச் சேவகப் பெருமாளி
னேதரியதிரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (

கொண்டைமேல் முடியின்மிசை கோதறு துராயாட
வண்டபகி ரண்டமின்னும்
குழையில்நவ ரத்தினக் குண்டல மிரண்டாட
கோதிவிடு மீசையொளிரத்
தண்டைபொற் பதமாட சர்வாங்கி யொளியாட
சல்லடக் கச்சையாட
தகதகென மார்பிற் பதக்கமா லையுமாட
சவ்வாதினுற் றிலதமும்
கண்டவர் பயந்திடக் கையிலரி வாளேந்து
கடககங் கணமாடவும்
கலகலென மணியாட நடனசன் னதமேவு
காட்சிதரு வாய்வண்டுதே
னுண்டுயர் துலக்குடிச் சேவகப் பெருமாளி
னேதரிய திரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (7)

திடபடையோ டுருபதியி லரசுபுரி சிங்கமே
சேனுபதித் தலைவனே
தீதான வசுரகுல காலனே பிர்மாண்ட
தீரவிஸ் தாரரூபா
அடர்பேயின் கண்டகோ டாலியே பகைவரை
யதஞ்செய்யு மதயானையே
யதிதமிகு மந்திரகு டாரியே கட்டிற்
கடங்காத மாகாளனே

இடரான பில்லிக்கு மிண்டனே யடியாரை
ரட்சித்த குலதெய்வமே
யிதமருவு தருணசஞ் சீவியே துன்பங்க
ளெய்தாது காக்குமரசே
உடையார் துலக்குடிச் சேவகப் பெருமாளி
ஞேதரியதிரு வாயிலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரக்ருப் பணசாமியே (8)

ஆதிக்க ருப்புஜெக ஜோதிக்க ருப்புதிரு
வழகர்சந் நிதிக்கருப்பு
அந்திக்க ருப்புமுச் சந்திக்க ருப்புநல்
லருள்சப்பா ணிக்கருப்பு
சீதக்க ருப்புமருள் போதக்க ருப்புமிகு
செங்கிடா வுங்கருப்பு
சேனுங்க ருப்புகார் தானுங்க ருப்புரிய
தீரசங்கி லிக்கருப்பு
நீதிக்க ருப்புசெஞ் சேவற்க ருப்புமிகு
நேர்கருங்கி டாக்கருப்பு
நித்தக்க ருப்புபுகழ் முத்துக்க ருப்புநல்
நிதிபெரிய மாகருப்பு
ஓதுந் துலக்குடிச் சேவகப் பெருமாளி
ஞேதரியதிரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (9)

காருலவு பொதிகைமலை நாகமலை தோகைமலை
கயிலைமலை மேருகிரியுங்
கருமலைக ரந்தமலை நீலமலை சோலைமலை
கன்னிமலை கஞ்சமலையுஞ்
சீருலவு யானைமலை கோம்பமலை கொல்லிமலை
தேக்கமலை சதுரகிரியுந்
தேவமலை யோடுபல கொச்சிமலை யுச்சிமலை
செம்புமலை திருமலையிலும்
பாருலவு மலையாள மேவுகம் பளமுதற்
பகருந்தலங் களெல்லாம்
பதிகொண்டு விளையாடு முயர்வினைச் சொற்றிடம்
பாலனாலெ ளியதோவான்
றோருரை துலக்குடிச் சேவகப் பெருமாளி
னோதரியதிரு வாயிலின்கண்
ணுற்றதள கர்த்ததிகழ் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணாசாமியே. (10)

கதிர்முதன வக்கிரக தோஷவலி பேய்பூத
கடியவிஷ நயனரோகம்
கண்ணேறு நாவேறு சன்னிசுர நீரிழிவு
கன்மவினை குன்மநோயும்
அதிசார மூலம்ப வத்திரம் பாண்டுபுண்
ணறையாப்பு வெட்டைமேகம்
அண்டவா தங்கண்ட மாலைகுலை நோய்குட்ட
மடர்சூலை யடுபடுவனும்

சதிவாத மீளேதிமிர் வாய்வுவயி றுப்பிசம்
க்ஷயரோக நோயெலாநின்
சந்நிதிய டைந்தவுட னேபறந் தோடுமிது
தருணமெனை யாளிகபரத்
துதிசேர் துலக்குடிச் சேவகப் பெருமாள்
துலங்குதிரு வாசலின்கண்
தோன்றுதள கர்த்தனே தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் புணசாமியே. (11)

கனவிலும் நினதுதிரு நாமமோதி டுதலாற்
கன்மவினை தீரவேண்டுங்
காயசுகமுங் கனகமேய சுகமும்மனை விமக்களொடு
வாழ வேண்டும்
தனரத்ன விர்த்தியொடு வாழவேண் டும்நல்ல
தருமநெறி யருளவேண்டும்
தரையாளு முடிமன்ன ருறவாக வேண்டுமிச்
சகவ்சிய மாகவேண்டும்
இனமான காரியம் ஜெயமாக வேண்டுமென்
னெதிரிகளை வெல்லவேண்டும்
எங்குசெலி னும்வழித் துணையாக வரவேண்டு
மெங்கள்குடி காக்கவேண்டும்
முனதருடு லக்குடிச் சேவகப் பெருமாள்
முன்னரணி வாயலுக்கு
முந்துதள கர்த்தனுந் தொட்டியச் சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (12)

அந்தரத் தேவாதி முதலாயி னோர்பணிந்
தஞ்சலிசெய் கின்றவிறைவா
அவரவர்ம னந்தனினி னைந்தபடி காட்சிதரு
மானந்த கோலாகலா
சுந்தரமி குந்தவனி யெங்கணுநி றைந்தன்பர்
தொல்வினை யகற்றுவிமலா
சூராதிசூரனே அண்டபகிரண்டமுந்
தோன்றிவிளை யாடுநிமலா
மந்திரசொ ரூபகிரு பாகரா வளநகர்
வணிககுல அருணாசலம்
மகன்பழனி யப்பனிசை கவியிலொரு குற்றமும்
வாராமலருள் செய்குவாய்
செந்திரு துலக்குடிச் சேவகப் பெருமாளி
னேதரிய திரு வாயலின்கண்
ணுற்றதள கர்த்த திகழ் தொட்டிய சமர்த்தவுக்
கிரகருப் பணசாமியே. (13)

# அலங்காரச் சிந்து.

---

## காப்பு.

கமலமாதுறை துலக்குடி மேவுந் தொட்டிய
கருப்பய்யன் மேற் சிந்து பாடவே
விமலனருளுந் தொந்தி கணநாதன் பதமலர்
வேண்ட தினந்தினமுங் காப்பதே.

கொண்டையில் சரிகைச்சந்திர காவியுருமால் சுங்கு
துலங்க நடனஞ் செய்வதாரய்யா
தொண்டர்கள் கலியகற்றுந் தொட்டியக் கருப்பண்ண
சுவாமியு மானவிவர் தானய்யா 2

காதில்முருகுாத்னக்கடுக்கனொளிவிளங்க
காரியமாய்வந்த துரையாரய்யா
பூதலமாந்தர்க்குதவுந்தொட்டியக்கருப்பண்ண
புண்ணியனானவிவர்தானய்யா 3

சந்தனங்கெந்தமணிந்து சவ்வாதுப்பொட்டிலங்க
சபையினில்வந்தவராரய்யா
மந்திரவடிவமானதொட்டியக்கருப்பண்ண
வலிவேங்கைப்புலியிவர்தானய்யா 4

மார்பில்பதக்கமாலைமகரகண்டியிலங்க
வந்துவிளையாடுந்துரையாரய்யா
தாரணிமாந்தர்க்குதவுந்தொட்டியக்கருப்பண்ண
தங்கமுத்துசிங்கத்துரைதானய்யா 5

கங்கணங்கையிலிலங்க துங்க அரிவாள் துலங்க
களரியில்வந்த துரையாரய்யா
மங்களமிகுஞ்சாத்தய்யர் வாசல்தளகர்த்தனெனும்
மந்திரியுமானவிவர்தானய்யா 6

மருங்கில்சல்லடங்கச்சைமணிகள்கலகலென
வந்துவிளையாடுந்துரையாரய்யா
கரங்குவித்தோர்க்குதவுந்தொட்டியக்கருப்புமா
காளனுமானவிவர்தானய்யா 7

மிதித்தபாதக்குரடும் வீரதண்டைகளொலிக்க
விளங்கநடனஞ்செய்வதாரய்யா
துதிப்பவர்களைகார்க்குந்தொட்டியக்கருப்பண்ண
துரைச்சிங்கமானவிவர்தானய்யா 8

சந்திரக்குடைபூச்சக்ரயிந்திரக்குடைக்கவிக்க
தாண்டவஞ்செய்யுமிவராரய்யா
இந்திராதிதேவரைக்காக்குந்தொட்டியக்கருப்பண்ண
யெங்கள் குலசாமியிவர்தானய்யா 9

நாகசுரமேளதாள நவபேரிகைமுழங்க
நடனம்புரியுமிவராரய்யா
மேகவர்னமானதொட்டியக்கருப்பண்ண
மெய்யன் துரைச்சாமியிவர்தானய்யா 10

சிங்கத்தடிதங்கத்தடி சிறந்திருபாலிலங்க
சிங்காரமாய்வருவதாரய்யா
செங்கண்மாற்சுதனனதொட்டியக்கருப்பண்ண
தேவரனுகூலனிவர்தானய்யா 11

தீவகத்திமத்தாப்பிலங்கீரவெடிமுழங்க
சிங்காரமாய்வருவதாரய்யா
ஆபத்துவேளைக்குதவுந்தொட்டியக்கருப்பண்ணா
ஆண்டவனானவிவர்தானய்யா 12

உபயசாமரைபோட உத்தமர்காளாஞ்சியேந்த
உகந்துநடனஞ்செய்வதாரய்யா
அபயமென்றோர்க்குதவுந் தொட்டியக்கருப்பண்ணா
அய்யனுமானவிவர்தானய்யா 13

வந்துகவிவாணர்களும் சிந்துகவிமிகப்பாட
மகிழ்ந்துநடனம்செய்வதாரய்யா
சிந்தையில்நினைத்தவரந் தந்தருளுந்தொட்டிய
சிங்காரக்கருப்பரிவர்தானய்யா 14

வஞ்சனையில்லிசூன்யம் வைப்பேவல்பேய்களோட
மாட்டியடித்தோட்டுமிவராரய்யா
அஞ்சலென்றேவந்துகாக்குந் தொட்டியக்கருப்பண்ணா
ரடங்காதகாளையிவர்தானய்யா 15

செங்கிடாய்கருங்கிடாய் சேவல்பலிதனைக்கொண்டு
தினம்பூசைகொள்ளுமிவராரய்யா
துலங்குமிகுமகோர தொட்டியக்கருப்பண்ண
சுவாமிதுரையாகுமிவர்தானய்யா 16

கனவுக்ரபெரியகருப்பருஞ்சிறிய
கருப்பருஞ்சூழவந்ததாரய்யா
தினமுந்தன்னடியார் குடிகாக்குந்தொட்டிய
தேவர்கள்சகாயனிவர்தானய்யா 17

கங்காளிராக்காச்சிதேவி சங்கிலியானுஞ்சூழ
காசினியில்வந்ததிவராரய்யா
துங்கவலங்கிர்தமிகுந் தொட்டியக்கருப்பண்ண
சுகிர்தனுமானவிவர்தானய்யா 18

சன்னசிசிந்தம்மனுடன் முன்னோடியும்வந்துசூழ
சங்கமதில்வந்ததிவராரய்யா
துன்னுமுடிமன்னவர்க்குச் சோதனைக்குறிகள்சொல்லும்
தொட்டியக்கருப்பரிவர்தானய்யா 19

அண்டாண்டபகிரண்ட யெண்டிசைகள்கிடுகிடென
அதிரநடனஞ்செய்வதாரய்யா
சண்டப்பிரசண்டனான தொட்டியக்கருப்பண்ண
சாமியுமானவிவர்தானய்யா 20

அளவிலாச்சாம்பிராணி அகில்தூபப்புகைக்குள்ளே
ஆனந்தமாய்வந்ததிவராரய்யா
களபகந்தமணியுந் தொட்டியக்கருப்பண்ண
காயாம்புவர்னனிவர்தானய்யா. 21

## கீர்த்தனை.

### பல்லவி.

வாவா கருப் பய்யனே
வந்தெனைக் காரு மய்யனே

### அநுபல்லவி.

வந்தேன் சன்னதி மகிழ்ந்தேன் மனதில்
நினைந்தேனுந்தனிரு தாளடி பணிந்தேன் (வா)

சரணம்.

வானோர்கள் புகழுந் தேவாதி தேவனே
வல்லரக்கரை வென்ற சூராதி சூரனே
சுந்தரச் சேவக ராஜர்க்கு தோளனே
துலக்குடியிற்வாழுந் தொட்டியக்கருப்பனே
சொக்கிடும் ஸ்தூபியை பக்கத்தில் நாடியே
மிக்கான தெரிசனை சொர்க்கங் கொடுத்திட (வா)

மன்ன மன்னர்கள்வந்து பணிந்திடுந் தேவா
மக்களடிய வர்குடிகளை காக்க வாவா
மானிலத்திற்செல்வ மடியவர்க் குதவுநேயா
மகிழுந் துலக்குடியில் வீற்றிருக்கு மெய்யா
மாசறவே தெரிசனையாம் தீதறவே கொடுத்துமிக
பூவையொற்ற மங்கைவரம் தாவியுற்ற சேயனே (வா)

மலையாள மொன்பது கம்பள மரசாட்சி
மன்னரளகர் கோவிலுக் கதிகாரி சாட்சி
தொலையாத அசுரரைக் கொன்ற சூட்சி
சொல்லலாமோ அவதாரப்பெருமையின்காட்சி
சொந்தமுள்ளதொண்டருக்கு வந்தநல்லகாரணத்தை
அந்தக்ஷணம் செய்துவைக்க வந்துதவு யிந்தநேரம் (வா)

# நொண்டிச் சிந்து.

## காப்பு.

பூமாது தானுற்றுப் பொங்குந் துலக்குடிவாழ்
நாமாது தண்ணருளால் நாமுரைப்பாம்—பூமீது
சாத்தய்யன் சிந்துரைக்கச் சார்ந்தசிவ குஞ்சரத்தின்
ஏத்தும் பதத்துணை யாமே.

சீர்பெரு மிளையாற்றங்—குடியில்
திறமான வணிகரின் மரபுகளில்
பேர்மேவு மாத்தூரு—கோவிலில்
பலமான மணலூரு வகுப்புதனில்
திருவுறு நகரத்தார்—வெகு
சிறப்புடன் பணிந்திடுங் கோவிலொன்று
கருங்குளங் கத்தப்பட்டில்—நின்று
கணக்காக ஓர்மயி லப்பாலே
துலக்குடி நகரமுண்டு—அங்கே
துலங்கும் விநாயக மூர்த்தியுண்டு
மலர்ப்பதம் பணிந்திடுவோம்—எங்களுக்கு
மகிழ்வாகப் பலனுந் தந்திடுவார்
சீர்பெறுஞ் சிவலிங்க—நாதரை
தினந்தோறுந் தவறாமல் தெரிசிப்போம்
ஆறுமுக வேலவரை—நாங்கள்
அன்புடன் பூசிப்போ மென்னாளும்

அய்யனர் கோவிலுண்டு—நாமம்
அழகான சேவகராஜ ரென்போம்
மெய்யான சோலைகளும்—நல்ல
மேலான தீர்த்தங்கள் மகிமையுண்டு
நந்தவனத் தோப்புகளும்—அதில்
நகரத்தார் விடுதிகளுந் தானமைத்து
சுந்தரக் கோவில்களும்—அழகாய்
துலங்கிய கோபுர வமைப்புகளும்
சித்திர முயராஜ—கோபுர
சிறப்புகளும் மண்டப பரப்புகளும்
சுற்றிலுந் திருமதில்கள்—காவல்
சூழ்ந்திடும் பூதக் கணங்களதும்
ஆசார வாசல்களும்—நேரில்
அருமையாய்நின்றிடுஞ்சேமங்குதிரைகளும்
பாசமாய் பணிந்துநிற்க—சன்னதியில்
பரிவுடன் சிவலிங்க முளைத்திருக்க
தேவர்கள் வந்திடுவார்—இரவினில்
தினந்தோறுந் தவருமல் துதித்திடுவார்
அவரவர் பக்தியிலே—அன்பாய்
அரகரா வென்றுமே போற்றிடுவார்
கேட்டிடுஞ் சத்தங்களை—எப்போதும்
கேட்கலாம் நிக்ஷயச் சனங்களென்றேன்
நாட்டிடு முலகத்திலே—அதிசயம்
தாஷ்டிகமாய்த் தோற்றமு மருளுமுண்டு

அய்யனூர் பீடமதில்—சிறப்புடன்
அழகாக வீற்றிருக்குங் கொலுவினிலே
மெய்யான கூட்டமதில்—புத்திமான்
மேதையான மந்திரி ரெண்டுபேர்கள்
அதில்முதன் மந்திரியாம்—அவர்பேர்
அழகான பதினெட்டாம் படித்துரையின்
பதியில் கருப்பணனும்—பெரியவர்
பாரில்முத லெல்லாங்காவல் கொள்ளுவார்
பலமான அரசாட்சி—இவர்க்கு
பலத்தி லொருவரும் நிகரில்லை
உலகி லடங்காத—காளை
உத்தமர் முன்பாக வந்திடுவார்
பெரிய துரைச்சிங்கம்—மேலும்
பெருமையுடன் கன்னபுரத் தெல்லையிலே
நீதியுட னரசாட்சி—செய்து
நிட்சய வரங்களை கொடுத்துவிட்டு
அழகர் மலையிற்சென்று—அங்கிருந்து
ஆற்காடு மலையாளஞ் சீமைமுதல்
இலங்கையிற் போய்சேர்ந்து—ஆங்கு
எங்குமே அரசாட்சி செய்துவைத்து
மற்ற விடங்களிலும்—தன்னுடைய
வல்லமையைக் காட்டிமிக நாட்டிவைத்து
உற்றதோர் பிசாசுகளை—ஓட
ஒருசொல்லில் போகும்படி விரட்டிவிட்டு

சொந்த இருப்பிடம்—வந்து
சுந்தர அய்யனிட சொற்படிக்கு
பந்தமுள்ள சேனைகளை—கொலுவில்
பரிவுடன் காவல்கொண்டு வீற்றிருக்க
இரண்டாவது மந்திரியாம்—நாமதேயம்
இதமுடன்சொல்கிறேன் கேளுமென்றேன்
கண்டதோர் தொட்டியத்து—கருப்பன்
கனமுடன் புவியில் விளங்கிவர
அரனார் பந்தியிலே—யெங்கள்
அழகு கருப்பணன் சொற்படிக்கு
துரையான மன்னவனும்—வெகு
துருசாக நடத்துவான் விரைவாக
சேனைப் பெருக்குகளும்—மற்ற
தேசங்க ளிலுண்டு சொந்தத்திலே
அணையைக் கடக்கமாட்டார்—உலகில்
அரண்டிடுவார் பார்த்தவர்கள் நிச்சயமாய்
சொல்லுறுதிக் காரனய்யா—வெகு
சோதனைகள் காட்டுவான் தெரியும்படி
மல்யுத்தக் காரனென்றேன்—மாரன்
மகா காளனென்றும் பேருடையான்
பூமிமுத லாகாயம்—நல்ல
புகழும் பதினாலு லோகம்வரை
நேமிதமா யாண்டுவரும்—சிவ
காமியின் வம்சக் கருப்பனென்றேன்

கட்டுக் கடங்காத—காளன்
கண்டவுடன் துஷ்டர்களுங் கலங்கிடுவார்
மட்டடங் காதமன்னன்—பேய்கள்
மாராமல் பிசாசுகளை ஓட்டிவைத்து
ஒருவரும் நிகரில்லாமல்—வெகு
ஒய்யார மாகவே வீற்றிருப்பார்
திருவுறு முன்னோடியும்—வந்து
தீரமுடன் சுவாமியைப் பணிந்துநிற்க
அடங்காத மகிழ்ச்சிகொண்டு—சுவாமியும்
ஆனந்த மாகவே குடிகளையும்
திடமுடன் காத்துவர—அருளால்
திட்டப்படி உத்தரவு செய்தபின்பு
சேனைத் தளங்களையும்—வெகு
சீக்கிரமாய்ச் சேர்க்கச்சொல்லி நிற்கையிலே
சேனைத் தலையாரி—அவன்
செகமெல்லாம் ஓர்நொடியிலாளப்பட்டவன்
சோணைக் கருப்பனென்று—வையகத்தில்
சொல்லுவார் பச்சமுடன் நிச்சயமாய்
வீணைசுரம் பாடிக்கொண்டு—வெகுவாய்
வீரமுடன் படைதீர மன்னர்களும்
சன்னாசித் தெய்வங்களும்—நொண்டி
சாமுண்டி முனியண்ண சுவாமிகளும்
முன்னோடி முன்பாக—வந்து
முடியை யசைத்துமே வணங்கிநிற்க

தீவட்டிச் சிறப்புகளும்—குண்டுகள்
தீரவெடிச் சத்தங்களு மோசைகளும்

பகவட்டி மத்தாப்பும்—ரங்கில்
பலவித மானவெளிச் சங்களும்

ஆலவட்டம் சுருட்டிகளும் —கேட்க
அன்புள்ள வாத்திய முழக்கங்களும்

கோலமுடன் மாதர்களும்—நடனம்
கோரிக்கையாய்ச்செய்துகொண்டுநிற்கயிலே

வாசனைத் திரவியமும்—பலபல
வந்திடும் புஷ்ப ஜாதிகளும்

கோரோஜனை கஸ்தூரி—புனுகு
குங்குமச் சவ்வாதுக் கலவைகளும்

உலகத்தில் பரிமளிக்க—நல்ல
உத்தமர் வெண்சாமரை வீசிவர

நலமுடன் கட்டியக்காரர்—பலபேர்
நாகரீகச் சக்ரக்குடை பிடித்துக்கொண்டு

நாடிடும் பேர்களுக்கு—வரமும்
நாட்டமுடனேகொடுத்துமிக தாஷ்டிகமாய்

பாடுவோ ராடுவோரும்—புகழ
பக்தர்களு மடியார்களும் போற்றிநிற்க

அழகான குதிரையொன்று—வந்து
அனேக ரத்தினத்தா லலங்கரித்து

அலங்கார வாயுதமும்—அணிந்து
அண்ணனை முன்னேடியு மேறிக்கொண்டு

எல்லோரும் பின்றுடர—உலகில்
ஏகசக்ரம் போலே விளங்கிக்கொண்டு
நல்லதோர் குடிகளிடம்—யெப்போதும்
நன்மையா யிருக்கும்படி காப்பாற்றி
ஜேயனும் செல்வங்களும்—எந்நாளும்
செழிப்பாக யிருக்குமென்று சொல்லிவிட்டு
ஆயனுட யிருப்பிடமாய்—வந்து
அழகான தொட்டியக் கருப்பரிடம்
காப்பாற்றி வந்தேனென்று—பிரியமாய்
கனமுடன் சொல்லியே நமஸ்கரிக்க
சாய்ப்பான கிருபையுடன்—சுவாமியுஞ்
சரியென்று சந்தோஷமாய்ச் சொல்லிவிட்டார்
சூலப்பி டாரியொன்று ... அவள்யார்
சொகுசான பத்திரகாளி நாமதேயம்
வலுவினி லேமிருந்தாள்—அவள்
வடிவுக்கு நிகரில்லை யுலகத்திலே
பொய்சொல்லா வாசகியாம்——அவள்
பூலோக மெங்குமே யாண்டிடுவாள்
மெய்யேவல் பில்லிகளும்—சூன்யம்
மேவியே பிசாசுகள் வந்திட்டாலும்
தீரா வியாதிகளும்—கெட்ட
தீரமுடன் கடிவிஷ நாவேறும்
பேர்சொன்னல் போதுமென்றேன்—விலகி
பெலமாக வலரியே ஓடிவிடும்

பக்தியி லடியவரும்—திருவிழா
பண்புட னடத்தவென்று மனதிலெண்ணி
சித்திரை மாதத்திலே—புரவிகளை
சிறப்பாக யெடுத்துமிகச் சேர்த்துவைத்து
ஆடிமாதம் பௌரணையில்—தீர்த்தமும்
அழகர் மலையிலிருந்து வரவழைத்து
தேடியே அபிஷேகமும்—ச்வாமிக்கு
சிரேஷ்டமாய் செய்துமிகச் சந்தோஷமாய்
மாசிமாதம் சிவன்ராத்திரி—அன்று
மகிழ்வுடன் திருவிழாவை நடத்தும்போது
சன்னசிக் காவடியும்—இளநீர்
சக்கரைப் பாலுடன் மச்சங்களும்
அக்கினிக் காவடியும்—பூவில்
அழகான சந்தனக் குடங்களும்
மிக்கான அதிசயமும்—பார்க்க
விதவிதத் தோற்றமும் நடக்குமென்றேன்
சன்னத மழைக்கவென்று—சாமியாடி
சன்னதி முன்பாக வந்துநிற்க
உன்னதமா யாவேசமும்—வெகு
ஓங்கார சத்தத்துடன் வருகையிலே
ஆகாயச் சாம்பிராணி—அடையாளம்
அன்புடன் வாங்கியே கொடுத்துவிட்டு
சகாயமாய்க் குடிகளையும்—என்றும்
சாக்கிறதையாய்க் காப்பாற்றி வருவாரய்யா

பள்ளத்தூர் நகரமதில்—வாழும்
பக்தர்களாம் வணிகர்குலத் தவதரித்த
உள்ளத்தி லன்புடையோர்—அவர்
உத்தமராம் அருணாசலஞ்செட்டியார்புத்திரனும்
பழனியப்ப னென்றுசொல்லும்—பக்தன்
பண்பாய்ச் சிந்துமிகப்பாடி யின்பமதாய்
அழகு கருப்பணனார்—தமது
அடிபணிந்து தெண்டனிட்டு போற்றிசெய்தோம்
ஐங்கர னு மீச்வர னும்—வாழி
அம்மையார் முருகவே ளனு தினமும்
செங்கண்மால் திருமகளும்—நான்முகன்
செழிப்பான கலைமகளுஞ் சிறக்கவேவாழி
தேவர்களு முனிவர்களும்—அமிர்தம்
தெவிட்டாத நான்மறை யோர்களும்
அய்யனார் கருப்பருமே—வாழி
அன்புள்ள குலதெய்வ அடியார்களும்
பாடினவர் கேட்டோர்களும்—வாழி
பண்புள்ள யித்தேசப் பாவலரும்
கத்தப்பட்டு தலக்குடியும்—வாழி
கருணையுள்ள யெல்லோரும் வாழிவாழியே.

# கும்மி.

## காப்பு.

அன்னையாம் வாலையை போற்றிசெய்துமிக
அன்புடன்கும்மியெடுத்துரைக்க
சொன்னயமானபிள்ளைகளுண்டானல்
சொற்குற்றம்பாராமல் காப்பாரே

துலக்குடிமாநகரொன்றுமுண்டாமதில்
தொந்திவிநாயகமூர்த்தி யுண்டாம்
மலர்ப்பதங்கள்பணிந்துகொண்டானந்த
மங்களக்கும்மியை யானுரைப்பேன் 2

விநியோகவர்க்கங்களெல்லாம் கொண்டுபோய்
மேன்மையாய்ச்சன்னதி முன்னம்வைத்து
கனிவுடன் புஷ்பங்களாபரணஞ்சாத்தி
கணபதிப்பெருமானை கைதொழவே 3

அன்னார்க்கிளையராம் ஷண்முகநாதனை
அன்பாய்மனதிலெண்ணித்துதித்து
நன்னயமாகச்சுயம்புலிங்கந்தன்னை
நாடிமனத்தாலேபோற்றிசெய்து 4

காவியத்தாற் புகழ் சேவக ராசராம்
கட்டழகன்முனம் வந்தடைந்து
ஓவியமாகும் பதம்போற்றி நாங்கள்
ஒய்யாரக்கும்மி யடித்திடுவோம் 5

மாதர்கள் கற்பு நழுவாது மழை
மாதமும்மாரி தவராது
தீதில்லாத தருமங்கள் நிலைபெற
செங்கோல்நடப்பதைப் பாருங்கடி 6

ஆயிரக்கால்பெறு மண்டபம் செய்ததில்
அய்யனிருப்பார் பொற்பீடமதில்
அந்தச்சிங்காரச் சிறப்பினைச் சொல்லவோ
ஆயிரம் நாவாலு மாகாது 7

அழகானபொம்மைகள் சிங்காரமாய்ச் செய்து
ஆசாரமுத்துக்கள் தொங்கவிட்டு
நன்னயமாகிய மண்டபந்தன்னிலே
நாட்டியப்பெண்கள் நடமாட 8

சங்கீதக்கச்சேரி தானடக்க ஓசை
சார்ந்த வுலகமெல்லா முழங்க
இங்கிதமாகவே தேவரனேகம்பேர்
எழுந்துகும்மித் தமிழ்ப்பாட 9

நளினமாதர்க ளாயிரம்பேர் கூடி
நாட்டினற் தீபத்தைக் காட்டிநிற்க
நாலாயிரம்பேர்க ளாலாத்தி யேந்தியே
நான்குபக்கமும் சுற்றிவர 10

தேவரிருக்கு மண்டபத்தில் தீபம்
செகமெல்லா மொளிவீசிடவே
பார்வைக்கிச்சொலிக்க ரத்னவகைகள்
பந்திபந்தியாய் வைத்திருக்க 11

வானவர்தானவர் வந்துகுடை யேந்த
மற்றவர் சாமரம் வீசிவர
நானுவிதமாம் பரிமள வாசனை
நாகராஜன் கொண்டு வந்துநிற்க 12

தேவராஜன்வந் தபிஷேகமுஞ் செய்ய
தினமும் தேவர லங்கரிக்க
மாதவமுனிவர்கள் வந்தமே பணிய
மகிழ்ச்சியாய் ஐயன்கொலு விருக்க 13

பூசகர்அர்ச்சனை புரிந்திடவுந் தினம்
புண்ணியகான மறைபாட
பக்தர்கள்வந்து துதிபாடப் புகழ்
பாடிக்கும்மி யடியுங்கடி 14

அய்யரின் சன்னதித் தென்பால் மண்டபம்
அழகாங் கருப்பணர் பாருங்கடி
மெய்யாம்பதி னெட்டாம்படியானு மவர்
மேவும்விவாத்தைக் கேளுங்கடி 15

ஆயனும் சிரசில் கிரீடம்வைத்துராமம்
அழகாம்நெற்றியில் சாத்திக்கொண்டு
மாயனும் பூணூல் சூலாயுதம்பெற்று
மன்னர்சிரப்பையும் பாருங்கடி 16

கும்பிட்டுத்தொழுது போற்றிசெய்தே யந்த
குலமகனைக்கொண் டாடுங்கடி
நம்மையிட்டுவந்த தீவினைக ளெல்லம்
நாடாமல் போக்குவார் பாருங்கடி. 17

கதிரோனுதித்த மண்டப மாமதை
 கட்டியிருக்கிறார் சிங்காரமாய்
விதவிதமான சூத்திரப் பாவைகள்
 வேடிக்கை செய்வதைப் பாருங்கடி. 18

மாணிக்கக்கல்லினல் பீடமிட்டு அதில்
 மரகதம் போலொளிர் தீபமிட்டு
மன்னர்மன்னராம் ராஜாக்கள் வந்து
 மாதவ சபைபோல் கூடிநிற்க. 19

தேவர்க்கரசராம் தொட்டியக் கருப்பர்
 ஜெகம்புகழ கொலு வீற்றிருக்க
பாதம்பணிந்திடும் பூத கணங்களும்
 பந்திபந்தியாய் சூழ்ந்திருக்கும். 20

ஆயிரமாயிர மிலட்சக் கணக்கான
 ஆடவர்வந்து கும்மியடிக்க
மாயனுந்தொட்டியக் கருப்பர் முன்பாக
 வந்துபணிந்து கும்மிபாட. 21

புண்ணியத்தீர்த்த மிருக்குதங்கே பாரு
 போகிஸ்நானமுஞ் செய்தவர்க்கு
கண்ணியமற்ற பவம்போக்கு மற்ற
 கருணுகடாக்ஷந் தனைக் கூட்டும். 22

ஆடிமாதந் திருநாள்நடத்த நம்மள்
 அய்யன்சன்னதி சிறக்கச் செய்து
அழகர்மலேக்கு யெல்லோருஞ் சென்று
 ஆனந்த தெரிசனம் செய்துகொண்டு. 23

தேடியேதீர்த்தக் குடமும்பெற்று நல்ல
தேவனருளா லெடுத்துக்கொண்டு
பாடியேஆடியும் பக்தர்களுங் கூடி
பண்புடன் கோவிலுக்குட் சேர்ந்து 24

அக்கினிவளர்க்கச் சன்னதி முன்பாக
ஆவேச மாயவர் வந்திறங்கி
முக்கனிசர்க்கரை பாலோடபிஷேகம்
முழங்கிச் செய்வதைக் கேளுங்கடி. 25

எழுநகரமாம் வணிகரு மன்னவர்
இங்கிதமாய்ச் செய்யும் பூசைமெத்த
வாழும் நிலைபெற்ற தருமங்கள் யாவையும்
வழங்கிவருகிறார் பாருங்கடி 26

வந்தசனங்க ளனைவருக்கு மன்னம்
வர்க்கவிதங்களாய்ச் செய்துவைத்து
சந்தனதாம்பூலம் தரும்வகை மெத்த
சப்ளைசெய்கிறார் நகரத்தார்கள். 27

சத்திரஞ்சாவடி தானமைத்து நல்ல
சார்ந்த தண்ணீரின் பந்தலிட்டு
உத்தமர் யோகியாம்யேழை பரதேசிக்
குள்ளமகிழ்ந் தன்ன மீந்திடுவார். 28

ராசகோபுரந் தன்னருகில் வந்து
ராஜாக்கள்போலவே வந்துநின்று
மேவியேகோபுர ஸ்தூபியைப் பார்த்து
மேன்மையாய்க் கும்மி யடியுங்கடி. 29

நாற்புறமதிலைச் சுற்றித் திரிந் தங்கே
நடனமாடி கும்மியடிக்க
வாலசாத்தய்யனர் பக்கத்தில் வந்து
வரங்களைத் தருகிறார் வாங்குங்கடி, 30

தந்தவரங்களை வாங்கிக்கொண்டே தொண்டர்
தாரணிமீதிற் சுகித்திருப்பர்
மங்களமாகவே வாழ்ந்திருக்கக் கும்மி
மகிழ்ச்சியாகவே பாடலுற்றோம். 31

பாலைநகராம் பள்ளத்தூரில் வாழும்
பழனியப்பன் கும்மி பாட்டுரைத்து
சாலத்துதிசெய்து சற்குரு வய்யனைச்
சாஷ்டாங்கமாகவே போற்றி னோமே. 32

துலக்குடி அய்யனர் கோவிலுக் கடிமை
துலங்கிய ஜனங்கள்எல்லாம் வாழி
நலம்பெற்றுவாழும் நகரத்தாரூராரும்
நாட்டிலுள்ள மக்கள் வாழியரே. 33

---

## ஆனந்தக்களிப்பு.

---

சீர்புகழும் துலக்குடியில் வாழும் எங்கள்
செல்வக் கணபதியை தெரிசிப்போ மெந்நாளும்

பார்புகழும் சொக்கேசர் சிறக்க நல்ல
பக்தியா யெல்லோரும் வந்துமே துதிக்க

வள்ளி தெய்வானை மணவாளன் முன்னதாய்
வந்திட்டார் நகரத்தார் பணிந்திட்ட தோளன்

அள்ளியே நிதிகளை வழங்க வாங்கி
அப்பவே நகரத்தார் துலக்குடி துலங்க

அய்யனார் சேவகப் பெருமாள் அங்கே
மெய்யான சன்னதி பெருகியே வாழ

சிங்காரக் கோவில்களும் கட்டி வெகு
சிறப்பாக வெடுத்தார்கள் திருமதிலைச் சுற்றி

பாங்கான கோபுர மியற்றி உயரப்
பண்புடனே ஸ்தூபிகளை சிகரத்தில் நாட்டி

ஆசார வாசல்களும் நேராய் அதற்கு
அழகான ராஜகோபுரமும் சீராய்

தேசங்கள் புகழுகின்ற மாடம் அதில்
சிறக்கவே போடுகிறார் பிரகாசத் தீபம்

பளிங்கிக்கால் மண்டபங்கள் கோர்த்து அய்யனார்
பண்புடனே வீற்றிருக்க பீடங்கள் சேர்த்து

செழிப்பான பெருமாளு மெங்கே ராஜர்
சிறப்பாக பீடத்தில் வீற்றிருக்கா ரிங்கே

சன்னதிக்கு யெல்லோரும் சென்று சுவாமியை
சாஷ்டாங்கமாகவே போற்றியே நின்று

உன்னதத் தீபங்கள் கண்டு காட்சி
உறுதியாய் வரங்களை வாங்கியே கொண்டு

பக்கத்தில் திரும்பியே பார்த்தோம் பெருமாள்
பதினெட்டாம் படியானைக் கண்டுதெரி சித்தோம்

அன்னவர் பேரதை சொல்ல அய்யர்
அழகு கருப்பண்ணா ரென்றுரேநல்ல

ஆண்டவனை கைதொழுது கொண்டோம் நாங்கள்
அன்புள்ள மனதில் தியானித்து நின்றோம்
பார்க்கவே மனவுறுதி மேவ சன்னதியில்
பண்புடனருளினால் மலர்மாரி தூவ
வாசனைகள் எங்குமே காண புஷ்பம்
மலர்களும் நன்றாக மணக்குதே தோண
சந்தனம் படிகளில் சாத்தி தீபம்
ஜாஸ்தியாய் பதினெட்டு படிகளிலு மேத்தி
இரத்தினத்தால் கிரீடம் வைத்தார் அழகர்க்கு
இதமுடன் சர்வாங்கி ஆபரணஞ் சாத்தினார்
நெற்றியில் திருநாம மிட்டு மார்பில்
நேராக பூணூல் சொர்னத்தால் போட்டு
ஆடைகள் விதவிதமாய்க் கட்டி சிறப்பாய்
அலங்காரம் செய்தார்கள் ரெத்தினத்தைப் பூட்டி
கையிலே சூலாயுதம் பிடித்தார் மாயன்
கனத்ததோர் சுக்குமாந் தடியையு மெடுத்தார்
எதிரிட்ட பிசாசுகளோட பக்தர்
எப்போது மடிபணிந்து தெண்டனிட்டு நாட
தென்புற மண்டபத்தைக் கட்டி அதற்கு
சிங்காரம் செய்தார்கள் மயனையுங் கூட்டி
அன்பார்ந்த மண்டபத்தை பார்க்க நம்மள்
அன்பர்கள் சொல்லி முடியுமோ கேட்க
கீழ்த்திசை சன்னதியை வைத்து தேவர்
கிம்புருடர் நாரதர் பீடத்தை யமைத்து

தொட்டியக் கருப்பரும் அமைந்தார் தேவர்க்கு
துணையாக ஆசனத்தில் றுடுக்காக விருந்தார்
பார்த்தவர்கள் திடமது கலங்க அய்யா
பக்தர்கள் மனதிலே நிலைகளும் குலுங்க
வானவர் வந்துமே தொழுதார் நகர
வணிகேசர் சிறக்கவே வீற்றிருக்கச் செய்தார்
எல்லோரு மடிபணிந்து நின்றோம் குடிகளை
எந்நாளுங்காப்பேனென்றார் திடமுடனேசென்றோம்
பக்தியாய்க் காவடிகளெடுக்க சன்னதியில்
பண்புடனே பிரார்த்தனைகள் சொல்லியே யிருக்க
எடுக்கவே மனவுறுதி கொண்டு உடனே
எல்லோரும் பட்டப்புளான் ஊரணிக்குச் சென்று
அன்பர்களெல்லோரும் வந்து அங்கே
அண்ணனும் கணபதியின் சன்னதியிற் சேர்ந்து
இன்பமாய் ஸ்நானங்கள் செய்து முறையாய்
இசைவுடனே மடிகளையும் இதமாகத் தரித்து
விபூதி ருத்திராக்ஷ மணிந்து செல்வ
வேதராஞ் சேவகப் பெருமாளைப் பணிந்து
கணபதியை யெல்லோரும் போற்றி கருத்தில்
கருணையுடன் காவடியை நேராகக் கட்டி
சர்க்கரைக் காவடிகளெடுத்தார் பன்னீர்
சந்தனக் காவடியும் கூடவே தொடுத்தார்
அக்கினிக் காவடியுங் கொண்டு மச்சம்
முக்கனிக் காவடியு முருக்காகச் சென்று

விதவிதமா யெடுத்தார்கள் நாளில் விளங்க
விரைவாகத் தூக்கினூர் காவடியைத் தோளில்

அரகரா சத்தங்கள் விளங்க தோதாய்
அழகான சங்கீத மேளங்கள் முழங்க

புறப்பிட்டார் துலக்குடியை நோக்கி நமது
புண்ணியனூர் வீற்றிருக்கும் வாசலை வாழ்த்தி

பதினெட்டாம் படியானை நாடி அடியவர்
பக்தியாய்க் காவடிகள் ஒயிலாட்ட மாடி

கொஞ்சத் தூரம் மனங்களிக்கச் சென்று ராஜ
கோபுரத்தைக் கண்டார்கள் தெரிசித்துக் கொண்டு

அப்பவே நடந்தார்கள் சிறக்க முன்னே
அக்கினி யோராளமாய் பரப்பியே விரிக்க

கண்டவுடன் ஆவேசம் வரவே அன்பர்
கலியகல பதினெட்டாம் படியானு மேவ

அய்யனூர் சன்னதியைப் பார்க்க நேரில்
அழகான காவடிகள் வந்துமே நிற்க

கண்டவுடன் ஆட்டங்கள் மெத்த சனங்கள்
காவடி யாட்டத்தைப் பார்க்கவே சுத்த

அந்நேரம் பாட்டுகள் பாட அருளால்
தன்னாலே காவடிகள் தாஷ்டிகமா யாட

நினைத்தவர்க ளெல்லோரு மகிழ புவியில்
நிமிஷத்தில் கேள்விகள் சொல்லியே புகழ

அக்கினியில் காவடிக ளிரங்க அந்த
அன்பான காவடிகள் பால்களும் பொங்க

மச்சங்கள் துள்ளியே பார்க்க நதியில்
மன்னவ ருத்தரவாற் கொண்டுபோய்ச் சேர்க்க
காவடிக ளெல்லோரும் சேர்ந்து மனக்
களிப்புடனே கோவிலேச் சுற்றியே தாழ்ந்து
காவடியைக் கொண்டுவந்து செலுத்தி உண்டியல்
காணிக்கை போட்டார்கள் காத்திஞலேந்தி
விபூதி பிரசாதம் பெற்றுர் வரங்கள்
வேண்டியதை வாங்கியே மகிழ்ச்சியா யுற்றுர்
சத்திரம் தருமங்கள் கட்டி அன்னக்கொடி
சாலவே மூன்றுநாள் வாசலில் நாட்டி
அன்பர்களாம் ஏழைகளே நண்ணி நகரத்தார்
அடியவ ரெல்லோரையு மனதிஞ லெண்ணி
இஷ்டமா யன்னங்கள் வழங்க மாராமல்
எப்போதும் தருமங்கள் குறைவற விளங்க
சொந்தமாயன்புள்ள நகரத்தார் அவர்கள்
சுற்றத்தார் மாத்தூரில் மணலூராய் வகுத்தார்
அந்தமுள்ள தலக்குடியை யடுத்தார் அவர்களே
அருமையாஞ் செல்வக் குடிகளாய் வைத்தார்
மனமகிழ்ந்த கண்டருக்குச் சொந்தம் நல்ல
மாநகரம் பள்ளத்தூரிருக்கின்ற அந்தம்
அந்நகரில் வசிக்கின்றுர் பாரு வணகரில்
அருளுடன் பழனியப்பன் சொல்கின்ற சீரு
ஆனந்தக் களிப்பதனேப் பாட உலகோர்
ஆண்டவனேச் சன்னதியில் துதித்துக் கொண் டாட

எல்லோரும் சுகமாக யிருக்க இறைவன்
இன்பமாய் கடாக்ஷம் வைத் தாரே சிறக்க
அன்புள்ள கணபதியே சரணம் அனுதினமும்
அய்யனூர் பூறணி பொற்கலையும் சரணம்
பதினெட்டாம் படியானே சரணம் பக்தர்
பணிந்திடும் தொட்டியக் கருப்பரே சரணம்
சரண மெண்ணுஞ் சரணம் யெப்போதும்
சாற்றினேம் தலக்குடி அய்யனூர் சரணம்

---

## வாழ்த்துக் கவி.

---

இத்தகு புராணந் தன்னை யெழுதுவோ ரெழுதுவிப்போர்
வித்தகம்பொருந்தக் கற்போர் கேட்பவர் பொருள்விரிப்போ
ரத்தனை பேரு மண்மே லளவிலாப் போகந் துய்த்துச்
சித்தரன் குடைய ராகிச் சிவலோக மருவி வாழ்வார்.

---

உ
சிவமயம்.

வெண்பா.

சிவாயநமவென்று சிந்தித்திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—உபாயம்
இதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

---

மரகதவிநாயகர் துணை.

வெண்பா.

மாவேழு மேழு வழிநகரத் தார்க்கென்றுங்
கோவாழுஞ் செல்வக் குலதெய்வ—மாவாழ்
மரகத விநாயகனை மாமலர்த்தூய் வாழ்த்த
வரநலவாழ் வெல்லாம் வரும்.

---

# நகரக்கோவில் 9

---

## சுவாமிகளின் பெயர்.

### 1. இளையாற்றக்குடி.

கைலாசநாதர்—நித்தியகல்யாணி.

### 2. மாற்றூர்

ஐந்நூற்றீசர்—பெரியநாயகி.

## 3. வையிரவன் கோவில்

வளரொளிநாதர்—வடிவுடையம்மை.

## 4. இரணிக்கோவில்

ஆட்கொண்டநாதர்—சிவபுறத்தேவி.

## 5. பிள்ளையார்பட்டி

கர்ப்பக விநாயகர்

திருவீசர்—சிவகாமவல்லி

மருதீசர்—வாடாமலர்மங்கை.

## 6. நேமங்கோவில்

ஜெயங்கொண்டசோளேசர்—சௌந்தரநாயகி

## 7. இலுப்பைக்குடி

தான்றோன்றீசர்—சவுந்தரநாயகி

## 8. சூரைக்குடி

தேசிகநாதர்—ஆவுடைநாயகி

## 9. வேலங்குடி

கண்டீசுவரர்—காமாச்சியம்மை

## இளையாற்றக்குடிகோவில்

கல்வாசநாட்டில் இளையாற்றகுடியான குலசேகரபுரத்தில்

1 ஒக்கூருடையார்

2 அரும்பாற்இளையாரான பட்டணச்சாமியார்

3 பெருமருதூருடையார்

4 கழனிவாசக்குடியார்

5 கிங்கிணிக்கூருடையார்

6 பேரசெந்தூருடையார்

7 சிறுசேத்தூருடையார்

ஆக வகை—7.

## மாற்றூர்க்கோவில்

கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில்

1 உறையூருடையார்

2 அரும்பாக்கூருடையார்

3 மணலூருடையார்

4 மண்ணூருடையார்

5 கண்ணூருடையார்

6 கருப்பூருடையார்

7 குளத்தூருடையார்

ஆக வகை—7.

## வைமிரவன் கோவில்

கேரளசிங்க வளநாடாகிய ஏழகப்பெருந்திருவான வீரபாண்டியபுரத்தில்

1 சிறுகுளத்தூருடையார்

2 கழனிவாசலுடையார்

3 மருதேந்திரபுரமுடையார்

இதில் 1-வது சிறுகுளத்தூருடையார் வகுப்பில்
மூன்று பிரிவுகள்.

1 பெரிய வகுப்பு
2 தெய்யனூர் வகுப்பு (தெய்வநாயகர் வகுப்பு)
3 பிள்ளையார் வகுப்பு

## இரணிக்கோவில்

கல்வாசநாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில்
இரணியூர் மருதங்குடியான ராஜநாராயணபுரத்தில்
1 இரணியூர்த் திருவேட்பூருடையார்

## பிள்ளையார்பட்டிக் கோவில்

கல்வாசநாட்டில் இளையாற்றக்குடியான குலசேகரபுரத்தில்
இரணியூர் மருதங்குடியான ராஜநாராயணபுரத்தில்
1 பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்

## நேமங்கோவில்

கோளசிங்கவளநாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில்
தேனாறுபாயும்
1 இளநலமுடையார்

## இலுப்பைக்குடிக்கோவில்

கோளசிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில்
இலுப்பைக்குடியான புகழிடம்கொடுத்த பட்டணத்தில்
1. சூடாமணிப்புரமுடையார்

### சூரைக்குடிக்கோவில்

கேரளசிங்கவளநாட்டில் சூரைக்குடியான
தேசிகநாராயணபுரத்தில்
1 புகழ்வேண்டியபாக்கமுடையார்

### வேலங்குடிக்கோவில்

கேரளசிங்கவளநாடாகிய பாலையூர் நாட்டில்
வேலங்குடியான தேசிகநாராயணபுரத்தில்
1 கழனிநல்லூருடையார்

---

உ
சிவமயம்.

## நகரத்தார்கள் கல்யாணங்களில் எழுதக்கூடிய

# இசைகுடிமான விபரம்.

---

பிரபவஹூ சித்திரைமீ 5உ கல்வாசநாட்டில் இளையாற்றக்குடியான குலசேகரபுரத்தில் ஒக்கூருடையான் அருணாசலஞ்செட்டி ராமநாதரோ, கேரளசிங்கவளநாடாகிய பிரம்பூர்நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில் அரும்பாக்குடையான் கண்ணப்பசெட்டி நாராயணரோ, இவர் மகன் சுப்பிரமணியனுக்கு இவர்மகள் வள்ளியம்மையை பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டமைக்கு இவர், பூஷணம்

ம் பொன் ஒன்பது ஆறு கல்லெடை, பொன் பதி முககலஞ்சி, இவர் சீதனம் கொடுக்கும் பொன். இம்மாறு இவ்வெடை பொன் ஆறு கழஞ்சு, வெள்ளி ஆறு கழஞ்சு, வெண்கலந் தராப்பலம் ஆறுபத்தொன்று, வெள்ளாட்டிக்கு பணம் முப்பது, சீராட்டுச்சக்காம் ஆறுபத்தொன்று இவ்வகைப்படி செய்வோம். இவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது, மோதிரம் விராகனெடை மூன்று, இவர் உகந்துடமையாய் கொடுக்கும் பொன், வளேவி ஏழு கழஞ்சு, இவ்வகைப்படி செய்வோம். இந்த நாள் இவரிடும் பொன், இவர் சொற்படி தெரிசனே பதிமுக்கழஞ்சு, இவ்வகைப்படி செய்வோம். இந்த இசைகுடி மானம் எழுதினேன். கல்வாச நாட்டில் இளேயாற்றக்குடியான

குலசேகர புரத்தில் ஒக்கூருடையான் சுப்பிரமணியஞ் செட்டி மகன் முத்தய்யா செட்டி கையெழுத்து.

இதன்கீழ்

மாப்பிள்ளே வீட்டுக்காரர் கையெழுத்து.

இதன்கீழ்

பெண் வீட்டுக்காரர் கையெழுத்து.

சுபம்.